29th September 1958]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இவ்விதம் சென்ற வருஷத்தில் வெல் ஸப்ஸிடி ஸ்கீம் ஒன்றும் இருக்கவில்லை. இதில் பழைய திட்டத்தின்படி கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இந்தத் திட்டத்தின் கீழ் கிணறுகளை வெட்டுவதற்குள்ள திட்டத்தை எடுத்துக்கொள்வதற்கு அரசாங்கம் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறது.

## UNSTARRED QUESTIONS.

*Length of roads under different surfaces*

1 *Q.*—**SRI N. R. THIAGARAJAN :** கனம் பொது மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் ஜில்லாவாரியாக விஸ்தீர்ணம் எத்தனை மைல் ?

(ஆ) ஜில்லாவாரியாக ரோடுகள் எத்தனை மைல் ?

(இ) அதில் (1) சிமின்ட் ரோடு, (2) தார் ரோடு, (3) கல் பாத்தல் ரோடு, (4) மண் ரோடு—எத்தனை மைல் ?

*A.*—The attention of the hon. Member is invited to the paper[a] laid on the table of the House.

*'We-Tamil' agitation*

2 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether the Government have any information that the Tamilians living abroad are badly hit because of the "We-Tamil" agitation started recently?

*A.*—No, Sir.

*Admission in Colleges*

3 *Q.*—**SRI M. C. MUTHUKUMARASWAMY :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை மாகாணத்தில் நடப்பு ஆண்டில் அரசாங்கத்தாராலும், தனிப்பட்டோராலும் நடத்தப்பட்டுவரும் ஒவ்வொரு கல்லூரிகளிலும் சேர்வதற்காக எத்தனை மாணவ, மாணவிகள் மனுசெய்து கொண்டார்கள் ?

(ஆ) ஒவ்வொரு கல்லூரிகளிலும் வகுப்புவாரியாக சேர்க்கப்பட்ட மாணவ, மாணவிகளின் எண்ணிக்கை என்ன ?

(இ) இவர்களில் ஹரிஜன மாணவ, மாணவிகள் எத்தனை பேர் ?

*A.*—(*a*), (*b*) & (*c*) The time and labour involved in collecting the particulars for answering the question will not be commensurate with the public interest served.

*Village Industries*

4 *Q.*—**SRI M. C. MUTHUKUMARASWAMY :** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவில் இதுவரை **(up to date)** தாலூகாவாரியாக எத்தனை இடங்களில் என்னென்ன கிராமக் கைத்தொழில்கள் **(Village Industries)** நடத்தப்படுகின்றன ?

*A.*—A statement[b] showing the names of departmental units started for the development of village industries in Tanjore district taluk-war, is placed on the table of the House.

---

[a] Printed as Appendix II on page 1014 infra.

[b] Printed as Appendix III on page 1015 infra.

[29th September 1958

### *Service Postage and Telegram charges*

5 Q.—**Sri M. P. SARATHI :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) **1956–57, 1957–58** ஆண்டுகளில் இந்த ராஜ்யத்தில் தபால், தந்தி இனங்களுக்கு மட்டும் **(Service Postage and Telegram charges)** எவ்வளவு ?

(ஆ) **1952–53** ஆண்டில் இந்த இனத்தில் ஆன செலவு என்ன ?

*A.*—Under the existing system of accounts the expenditure on Service Postage and Telegram charges relating to the various Departments of the Government is not booked under distinct detailed heads but is merged with the expenditure on 'contingencies'. It is not, therefore, easy to work out the actual expenditure on Service Postage and Telegram charges. On a rough estimate, the cost of Postage and Telegram charges will be about Rs. 50 lakhs per year and of Telephone charges about Rs. 10 lakhs per year.

### *Village maps*

6 *Q.*—**Sri M. P. SARATHI :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வட ஆற்காடு ஜில்லாவில் கடந்த ஐந்து ஆண்டுகளுக்குள் எந்த எந்த தாலூகா மேப்புகள், கிராம மேப்புகள் புதிப்பிக்கப்பட்டு, வரைந்து, அச்சிடப் பட்டுள்ளன ?

*A.*—**1953–54** முதல் **1957–58** வரையுள்ள கடந்த ஐந்து ஆண்டுகளில் வட ஆற்காடு ஜில்லாவில், செங்கம் தாலூகாவில் மேப்பு மாத்திரம்தான் **1956–57**-ல் புதுப்பித்து அச்சிடப்பட்டது. அந்த ஜில்லாவில் ஒரு கிராம மேப்பும் புதுப்பித்து அச்சிடப்படவில்லை.

### *Livestock Farms*

7 Q.—**Sri M. P. SARATHI :** கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வட ஆற்காடு ஜில்லாவில் எந்த இடங்களில் **"Livestock Farms" "Cattle-Breeding Societies". "Artificial Insemination Centres"** உள்ளன ?

*A.*—There are no Livestock Farms in North Arcot district. There are two Cattle-Breeding Societies in the district, one at Bheemakulam and the other at Kalasapakkam. There is one Urban Artificial Insemination Centre at Vellore.

### *Drinking Water wells*

8 *Q.*—**Srimathi A. S. PONNAMMAL :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) நிலக்கோட்டை தாலுகாவில், **1956–57**-ம் ஆண்டிற்கு குடி தண்ணீர் விஷயமாக எத்தனை மனுக்கள் வந்திருந்தன ?

(ஆ) அதில் எத்தனை கிணறுகள் வேலைக்கு எடுக்கப்பட்டிருந்தது ; முடிந்த கிணறுகள் எத்தனை ?

(இ) **1957–58**-ம் ஆண்டிற்கு குடிதண்ணீர் விஷயமாக எத்தனை மனுக்கள் வந்திருக்கின்றன ?

(ஈ) இதுவரை வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட கிணறுகள் எத்தனை ?

(உ) பாக்கி எடுக்காமல் இருப்பதற்கு காரணம் என்ன ?

29th September 1958]

*A.*—(*a*) Fifty-two petitions were received in 1956–57.

(*b*) Fifty-three well works were taken up and thirty-one well works were completed in the year.

(*c*) Fifty-eight petitions were received in 1957–58.

(*d*) Forty-five well works were taken up.

(*e*) Does not arise as all works have been taken up for execution.

*Government poramboke lands in Bhavani taluk*

9 *Q.*—Sri P. G. MANICKAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லா, பவானி தாலூகாவிலே விவசாயத்துக்கு லாயக்காகவுள்ள கவர்ன்மெண்டு புறம்போக்கு நிலங்கள் எந்தெந்த இடங்களில் எத்தனை ஏக்கராக்கள் இருக்கின்றன ?

(ஆ) 1957–58-ம் வருஷங்களிலே, இந்நிலங்களிலே, எந்தெந்த இடங்களில் இருக்கும் நிலங்கள், எத்தனை ஏகரா நிலங்கள் நிலமில்லாத ஏழைகளுக்கும், ஹரிஜனங்களுக்கும் பட்டா செய்து கொடுக்கப்பட்டன ?

(இ) இவர்களுள் ஹரிஜனங்கள் எத்தனை பேர் ?

*A.*—The Government have no information. The time and labour involved in collecting the information will not be commensurate with the advantages to be gained.

*Government poramboke lands in Gobichettipalayam taluk*

10 Q.—Sri P. G. MANICKAM: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, கோபிசெட்டிபாளையம் தாலூகாவிலே விவசாயத்துக்கு லாயக்காகவுள்ள கவர்ன்மெண்டு புறம்போக்கு நிலங்கள் எந்தெந்த இடங்களிலே எத்தனை ஏகராக்கள் இருக்கின்றன ?

(ஆ) 1957, 1958-ம் வருஷங்களிலே, இந்நிலங்களிலே, எந்தெந்த இடங்களில், எத்தனை ஏகரா நிலங்கள் நிலமில்லாத ஏழைகளுக்கும், ஹரிஜனங்களுக்கும் பட்டா செய்து கொடுக்கப்பட்டன ?

(இ) இவர்களுள் ஹரிஜனங்கள் எத்தனை பேர் ?

*A.*—The Government have no information. The time and labour involved in collecting the information will not be commensurate with the advantages to be gained.

*Export of Beedies*

11 *Q.*—Sri P. G. MANICKAM: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1957, 1958-ம் வருஷங்களிலே ஒவ்வொரு ஜில்லாவிலிருந்தும் எந்தெந்த அயல்நாடுகளுக்கும், இந்தியாவிலுள்ள மற்ற ராஜ்யங்களுக்கும் எத்தனை ரூபாய் மதிப்புள்ள பீடிகள் ஏற்றுமதி செய்யப்பட்டன ?

[29th September 1958

*A.*—The particulars relating to the value of beedies exported from several Ports in Madras State to foreign countries during 1957–58 are as follows :—

*Value of beedies exported from this State to foreign countries during 1957–58*

| *Name of port.* | *Ceylon.* | *Singapore.* | *Federation of Malaya.* |
|---|---|---|---|
| | RS | RS. | RS. |
| Madras .. .. | Nil. | 2,28,792 | 49,976 |
| Nagapattinam .. .. | 7,01,878 | 4,83,105 | 73,705 |
| Dhanushkodi .. .. | 62,74,018 | Nil. | Nil |
| Tuticorin .. .. | 11,04,935 | Nil. | Nil. |
| Total .. | 80,80,831 | 7,11,897 | 1,23,681 |
| | (Rupees eighty lakhs, eighty thousand, eight hundred and thirty-one only.) | (Rupees seven lakhs, eleven thousand, eight hundred and ninety-seven only). | (Rupees one lakh, twenty-three thousand, six hundred and eighty-one only). |

District-wise particulars are not available. Similar information regarding the value of beedies exported from this State to other States in India by Sea and rail are also not available, as they are not recorded separately.

*Cultivation of the lands under the Mettur West Bank Canal*

12 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயமுத்தூர் ஜில்லா, பவானி தாலூகா, மேட்டூர் வலது கரைப் பாசன (Mettur West Bank Canal) ஆயக்கட்டுக்குச் சேர்ந்த 17,210 ஏக்கர் நிலங்களிலே இன்னும் 1,103 ஏக்கர் 51 செண்ட் நிலங்களுக்கு நீர்ப்பாசனம் கிடைக்கப்படாமல் இருப்பதற்கான காரணங்கள் யாவை ?

(ஆ) அதில் கண்ட 1,103 ஏக்கர் 51 செண்ட் நிலங்கள் எந்தெந்த கிராமங்களிலே இருக்கின்றது ?

*A.*—(*a*) & (*b*) Revised figures have been received from the Collector that, out of the total ayacut of 17,210 acres under the Mettur West Bank Canal, an extent of 14,106·49 acres has been brought under cultivation so far, and the extent remaining uncultivated is 3,103·51 acres. The extent left uncultivated during fasli 1367 falls in the following villages :—

1 Nerinjipet
2 Ariyagoundanur.
3 Ammapet.
4 Boothpadi.
5 Sidgampet.
6 Padavalkalvai.
7 Kadappanallur.
8 Kesarimangalam.
9 Kalbhavi.
10 Kurichi.
11 Poonachi.
12 Jambai.
13 Mylambadi.
14 Varadhanallur.
15 Sanyasipatti.
16 Talakulam.
17 Bhavani.
18 Andikulam.
19 Urachikottai.

The reason for the non-cultivation of this extent is reported to be due to non-reclamation of the lands by the ryots.

29th September 1958]

*Lands for the Harijans of the Virudhachalam taluk*

13 *Q.*—SRI P. VEDAMANICKAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) விருத்தாசலம் தாலூக்காவிலுள்ள தரிசு நிலங்கள் எத்தனை ஏக்கர் ?

(ஆ) ஐந்து ஏக்கருக்கு மேல் பட்டா நிலமுள்ள மிராசிதார்கள் ஆக்ரமித்துள்ள தரிசு நிலங்கள் எத்தனை ஏக்கர் ?

(இ) 1957-ம் ஆண்டு செப்டெம்பர் மீ 1-உக்கு பிறகு நிலமற்ற ஏழைகளுக்கு பட்டா வழங்கிய தரிசு நிலங்கள் எத்தனை ஏக்கர் ?

(ஈ) ஐந்து ஏக்கருக்கு மேல் பட்டா நிலமுள்ள மிராசுதாரர்கள் ஆக்ரமித்துள்ள தரிசு நிலங்களிலிருந்து நிலமற்ற ஏழைகளுக்கு பட்டா வழங்கிய நிலங்கள் எத்தனை ஏக்கர் ?

(உ) 1957-ம் ஆண்டு செப்டெம்பர் மீ 1-உக்கு பிறகு விருத்தாசலம் தாலூக்காவில் ஹரிஜனங்களுக்கு வழங்கிய பட்டாக்கள் எத்தனை ? நிலங்கள் எத்தனை ஏக்கர் ?

*A.*—The particulars are not available with the Government. The time and labour involved in collecting the particulars will not be commensurate with the advantages to be gained.

MR. SPEAKER : I have received notice of an adjournment motion from the Hon. the Leader of the Opposition. According to the rules, it must be given to me before the meeting starts. The Hon. the Leader of the Opposition gave it to me here after the commencement of to-day's sitting. How does he expect me to consider it here and now? I shall take it up to-morrow.

SRI A. VEDARATHNAM : ஸார், ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், கனம் மந்திரிகள் கொடுக்கின்ற பதில்கள் எல்லாம் ஆங்கிலத்தில் இருக்கின்றன. இதனால் ஆங்கிலம் தெரியாத அங்கத்தினர்களும், ஆங்கிலம் அரைகுறையாக தெரிந்தவர்களும் கஷ்டப்படுகின்றனர். மைசூர் முதலிய பிராந்தியங்களில் நடப்பதுபோல் கேள்விகள் முன்னதாகவே கொடுக்கப்படும்பொழுது அதனுடைய பதிலையும் அச்சிட்டுக்கொடுத்தால் அங்கத்தினர்களுக்கு உதவியாக இருக்கும். அதிலில்லாமல் இருந்தாலும் உபகேள்விகளை கேட்கும்போது அதற்கு கொடுக்கப்படுகின்ற பதிலும் அங்கத்தினர்களின் பார்வைக்காக வருகிறது. அப்படி வரும்போது மூலகேள்வியினுடைய பதிலும் தெரிந்திருந்தால் அங்கத்தினர்களுக்கு சௌகரியமாக இருக்கும். ஆகவே இதற்கு ஒரு முறையை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : இதைப்பற்றி கனம் மந்திரிகள் கவனிக்க வேண்டும். இதில் பாயின்ட் ஆப் ஆர்டர் ஒன்றுமில்லை.

SRI K. SATTANATHA KARAYALAR : Sir, I rise on point of order. Rule 35 says : Questions requiring long statements or statistics shall not be Starred.

இவ்விதம் குறுகிய பதில் கொடுக்கக்கூடிய கேள்விகளையும் "அன்ஸ்டார்டு" லிஸ்டில் சேர்த்திருப்பது முறைதானா என்பதை அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : The decision as to whether a question should be starred or should not be starred under Rule 35 is entirely within the discretion of the Speaker. The hon. Member cannot question it.

[29th September 1958

**Sri M. K. SOMASUNDARAM** · Sir, I rise on a point of order. சட்டசபைக் கூட்டம் நடந்துகொண்டிருக்கும் இந்த சமயத்தில் குருவிகள் மேலே இருந்துகொண்டு அங்கத்தினர்களின் இருப்பிடத்தை அசுத்தம் செய்துகொண்டிருக்கின்றன. ஆகவே தலைவர் அவர்கள் ''எவிக்ஷன் நோட்டீஸ்'' கொடுத்து குருவிகளை வெளியேற்றுவதற்கு நடவடிக்கை எடுப்பார்களா என்பதை கேட்க விரும்புகிறேன்.

**[*Note.*—An asterisk(*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—CALLING ATTENTION TO THE DISCONTINUANCE OF THE SUPPLY OF UNIFORMS TO THE SANITARY WORKERS OF THE COIMBATORE MUNICIPALITY.

**Sri N. MARUDACHALAM :** கனம் சபாநாயகர் அவர்களே, கோவை நகர சபையில் இன்று 1,400 முனிசிபல் தொழிலாளிகள் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஏற்கெனவே அந்த நகரத்தினுள்ள மக்களுடைய சுகாதாரத்திற்காக, தங்களுடைய உடல் நலத்தையும் பாராமல் மக்கள் அருவருக்கத் தகுந்த வேலைகளை எல்லாம் செய்து கொண்டிருக்கிறார்கள். அப்படி வேலை செய்துகொண்டு வரும் அந்த தொழிலாளிகளுக்கு எல்லா முனிசிபாலிட்டிகளிலும் கொடுக்கப்படுகின்ற துணிகள் சரியான விதத்தில் கொடுக்கப்படுவதில்லை. சென்னை மாகாணத்தில் பல முனிசிபாலிட்டிகளில் தமிழ் வருஷப்பிறப்பு தினத்தன்றும் காந்தி ஜயந்தி தினத்தன்றுமாக இரண்டு தவணைகளில் துணி கொடுத்துக்கொண்டிருந்தார்கள்.

சென்ற 1958-வருஷம் மார்ச்சு மாதம் 1-ந்தேதி கவுன்ஸில் கூட்டத்திலே பெருவாரியான காங்கிரஸ் கவுன்ஸிலர்கள் இந்தத் துணி கொடுக்கக் கூடாது என்ற தீர்மானத்தைக் கொண்டுவந்தார்கள். துணி கொடுக்கக் கூடாது என்ற தீர்மானம் மோசமானது—ஹரிஜனங்கள்தான் இன்றைக்கு வேலை செய்து வருகிறார்கள், அவர்களுக்குத் துணி கொடுக்கக் கூடாது என்று சொல்வது மோசமானது—என்று எதிர் கட்சிக் கவுன்ஸிலர்களெல்லாம் தீர்மானத்தை எதிர்த்து சபையைவிட்டு வெளியேறினார்கள். இதற்குக் காரணம் என்ன கூறுகிறார்கள் என்றால் அவர்கள் சங்கம் வைத்துக்கொண்டார்கள், கோரிக்கைகளை. . . .

10-10 a.m. **The Hon. Sri C. SUBRAMANIAM :** ஒரு நகர சபையில் நடந்த விஷயத்தைப்பற்றி, ஒரு நகர சபைக்கு பூரண அதிகாரம் இருக்கும் விஷயத்தைப் பற்றி அங்கு தீர்மானம் கொண்டுவந்தார்கள், வெளியேறினார்கள் என்றெல்லாம் பேசுவது சரியல்ல. துணி கொடுக்கவேண்டும் என்று சொல்லலாமே தவிர, முனிசிபல் விவகாரத்தைப் பற்றி இங்கு பேசுவது சரியல்ல.

**Mr. SPEAKER :** நோட்டீஸ் கொடுத்திருப்பதுகூட

" The decision of the Municipal Council of Coimbatore to discontinue the free supply of uniforms to the sanitary workers employed under them."

என்பதுதான். ஆகையால்தான் இதை நான் சபை முன் வைத்தேன்.

**Sri M. KALYANASUNDARAM :** The hon. Member is explaining how the decision was taken by the Municipal Council. He has to explain how the decision was taken to impress on this House how that decision was unjust.

**Mr. SPEAKER :** It is not necessary. I rule that no reference to the Coimbatore Municipal Council should be made.

**The Hon. Sri C. SUBRAMANIAM :** முனிஸிபாலிடியைப்பற்றி கனம் அங்கத்தினர் ஒன்றும் சொல்லவேண்டாம். துணி கொடுக்கவேண்டுமென்பதைப் பற்றி மட்டும் பேசவேண்டும்.